## ௬-வது வாயு பூசித்த சருக்கம்.

கலிநிலைத்துறை

என்று மாதவ ரியம்பலு மிருந்தவச சூத
னன்று நன்றெனா நாகிளம பிறைகொழுந தணிந்த
குன்ற வில்லியைக் குழைவொடும வணங்கிவந் கூழந
தொன்று பூசனை யுஞற்றிய பரிசெடுத் துரைப்பான் க

உம்பர் கூறிய திறத்தினை யுலவைவேந் துடகொண்
டிம்பர் மானிலந் தெய்திகா ளிரிபபுனன் மூழ்கிச
சம்பு வாழ்திரு மாணிக்கச் சைலத்தைத் தாழ்ந்து
நம்ப னாரு ளாலநத நலவரைக் கீழ்பால உ

பாறை யொன்றினிற பறறிய வயிரத்தண் டதனு
ளூறி வண்புன லொண்சுவை யமுதெனப பெருக
வீறி லாதநற் றடாகமொன் றியலபுறக் கண்டே
யாறு சூடியை யகத்துளவைத் தபபுன லாடி ங

செய்ய மாணிக்கத் திருமலை தனைவலஞ் செய்து
சைய மீதுறறுப பசசிம துவாரத்தார சாரந்தே
யையன் பாதபங் கயங்களை யனபொடு வணங்கி
யுய்யு மாறுபற பலதுதி யொருங்கெடுத் தோதி ச

இமய வல்லிதன் னிருபத முளரிக ளிறைஞசி
யன்மயில் காதலி னைங்கர னடிமலா போற்றிக
குமரன் சீரடி கும்பிட்டுக் குழகன்வீற றிருக்கு
சிமைய மால்வரைச சிகரத்தை வலஞ்செய்து மகிழந்தே ரு

இனைய வாறுமா ருதம்பல பருவமங் கிருந்து
முனைவன் சேவடி முதிர்ந்தபே ரன்பினிற் போற்றித

துனிபி லாத்தவம் பற்பல வியற்றனர் தாங்க
வளையும் வார்சடை மௌலியான் வந்துதோன் றினனுங் க

காள கண்டமுங் காதல னன்குழுக் கண்ணுந்
தோளி னீணிலாச் சொரியுமுந் நூலும்வான் சடிகை
வாள ராமணிப் பணியுமுத் தூளமும் வபங்க
மீளி மால்விடை மேல்வந்து தோன்றும்வின் னவனை

உலவை வேந்தன்முன் கண்டன னுவகைமீ தூரத்
தொலைவி லாதபே ரன்பினுற் றனைபடிக் கமலந்
தலையிற் சூடினன் றன்னையு மறந்தன னாகி.
யலகி லாதன வருந்துதி பற்பல வறைந்தான்

எண்சீரடியாசிரிய விருத்தம்

கங்கா தரனே சரணஞ் சரணங்
கருணா நிதியே சரணஞ் சரணம்
பொங்கா ழியினஞ் சுண்டாய் சரணம
புரமூன் றெரிசெய் தருள்வாய் சரணம்
வெங்கா லனையன் றடாத்தாய் சரணம்
விறகா மனைமுன் வென்றாய் சரண
மிங்கா தரவா ரெந்தாய் சரண
மிரதனா சலனே சரணஞ் சரணம்

மருவா ரிதழித் தொடையாய் சரணம்
வானோ ரணிமா மணியே சரண
முருவா யருவா யுறைவாய் சரண
மொருநான் மறையின் பொருளே சரணம
கருவா யுலகந் தருவாய் சரணங்
கண்மூன் றுடைய கனியே சரண
மிருளா யொளியா யியல்வாய் சரண
மிரத்னா சலனே சரணஞ் சரணம்
கல்லா லடிவாழ் கனியே சரணங்
கமலா சனனுக் கரியாய் சரணம்

## வாயு பூசித்த சருக்கம்.

நல்லார் பரவப் படுவாய் சரண
நானு கலையும் நவில்வாய் சரணம்
வில்லா நுதலாள் பாகா சரணம
விடைமேல் வருவாய் சரணஞ் சரண
மெல்லா வுலகு நிறைவாய் சரண
மிரதனு சலனே சரணஞ் சரணம்

### எழுசீரடியாசிரிய விருததம்

மெய்மயி ரரும்ப நாத்தழும பேற
மேதகு மின்னன துதிக
ளையன்முன னியமபிச சதாகதி புணிய
வண்ணனு ம்வன்முகம நோக்கி

யுய்யநீ மனததி னுனனிய வரங்க
ளுரைததியென றேதனு நாயேன்
வையமா ரூட மேருவைப பெயாதத
மாசொழித தருளுதி யெனறுரை

என்றலு மிறைவ னவவர முதவி
யீடுசால் பிராணனோ டபான
னென்றிய வியான னுதானனே சமான்
னாககமமா நாகனே கூர்மன்

றன்றருக கநலாக் கிருகரன் றேவ
தத்தனே தனஞசய னெனனுமம
வென்றிகொ ளீரைந துருவநீ யெயதி
மேதினி புரநதுவாழ கெனறுன

புங்கவன் பின்னுந துலாமதி யத்னகட
பூரணைப் பக்கத்தி லுனது
பங்கமி ரீராசதம படிநதவா படிறு
பகருதல பிறாபொருள் கவர்த
லிங்கிவை யாதி கரிசகன் றுய்ய

வின்னருள் புரிகுவ மென்ன
வங்கவற் குரைத்தே விளிங்கத்துட் கரந்தா
னளவிலா வருட்பெருங் கடலே கக

அண்ணலவான் கருணை யிருந்தவா றியம்பி
யதிசய மென்றக மகிழ்ந்து
வண்ண மாணிக்க மலையினைச் சூழ்ந்து
வந்தனை பலமுறை புரிந்து
கண்ணகங் குளிர நோக்கியே பின்னுங்
கைதொழு தனிலவன் சென்று
நண்ணினன் றனது பதியினை யென்று
னற்றவ முனிவரு நயந்தார் க௰

அனிலவ னன்பாற பூசனை யியற்றி
யண்ணலி னருள்பெற்று மீண்ட
புனிதநற காதை படித்தவர் படிக்கப்
பொருளபல வழங்கிய தூயோ
ரினிதென மகிழ்ந்தே தொழுதினோர் கடல்சூ
ழிபபுவி முழுவதும புரந்து
பனிமதிக கண்ணிக குழகன தருளாற்
பரானந்த வாரியிற படிவார் கக

வாயு பூசனை புரிந்த சருக்கம்

முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் ௱௭௯



# ௫-வது ஆதிசேடன் பூசனை புரிந்த சருக்கம்.

---

## ஆறுசீரடியாசிரிய விருத்தம்.

மாருதம் பூசை செய்து வரம்பெறு காதை முற்றுஞ்
சோருதல் சிறிது மின்றிச் சொற்றனை சூத விப்பாற்
றரணி சுமந்த சேடன் றற்பரன் றனைப்பூ சித்த
சீருரைத் திடுதி யென்றா ரவனுமச் செய்தி கொலவான    ௧

மதவலி வாயு வீசன் மலரடி பணிந்து மாசு
கதுமெனப் பெயாதத மாற்றங் கதங்கெழுஞ் சேடன்கேட்ப
விதமுற மகதி நலயா ழிருந்தவ னுரைத்த லோடு
திருமுறு மிமையோர் முன்னந் தெரித்ததங் கருதியன்றேன்

பார்ப்பன வேடங் கொண்டு பாமிசை யெமபி ரானைச்
சீர்த்தளி பலவுஞ் சென்று சேவிக்கு நசையான மேல்பாற்
காகடற் கூலந் தோசா கடிபவெம் பிறவி நீங்கக்
கூர்த்தமெய்த் தவத்தோர் போற்றுங் கோகன்னஞ் சென்று
வாழ்த்தி    ௩

பிருகுகன் னத்தி ஞேடு பிரபாசம் பணிந்து போற்றி
மருமலர்ப் பொதும்பா மந்த ராசலம வணங்கிப் போந்து
மருவிபாய் பிரம சைய மனந்தனை யமுஞ்சென றேத்திக்
கருதுசோ மேச மோங்குங் கபிலேசம வணங்கிப் பின்னர்    ௪

தூயசே ளத்தி னுற்ற சுசீந்திர மயேந்தி ரத்தோ
டேய்கூ விளவன் கான மிறைஞ்சிநற் கதங் கூப்போ
ஈயபாரப் பதீசம் போற்றி யழகுறும வியாத சாலை
நாயக னுறையும் வேத நகரங்கோ மேசம் போற்றி    ௫

சுந்தர நதிதீ ரத்திற் றலங்கவி ஞசி யோடவ
வந்தமில் பதிக்குத் தூய வங்கியந் திசையின் மேவு
மந்தமா ருதமு லாவு மாகத வனஞ்சூழ் வந்து
கொந்தலர் பவானிக் கூடற் குலநகர் தொழுது மாதோ

சேயிதழ்க் கமல பீடத் திருமகள் வனமவ ராகித்
தூயசங் கபவி சாலைத் தொல்புகழ்ப் பிரம வாழ்த்தி
யேயவண் சுவேத வெற்பை யிறைஞ்சியெம் பெருமா னமேவு
நேயமார் திருக்கூ டத்தோ டானிலை நேசித் தேத்தி

கொல்லியும் பொருப்பிற் பஞ்சக் குளிர்நதித் தீர்த்தந் தோய்ந்து
நலைறப் பள்ளி நாதர் நாணமலாச் சரணம் போற்றி
யொல்லைவே தாச லத்தோ டோங்குமீங் கோயு மேத்தி
யலைறீர்த் தருள்கட் பாட விப்புகுந் தடைவின் வாழ்த்தி கஅ

முத்தொடு வயிர முந்தி முரிவெண் பருப்பப் பீலிக்
கொத்துடன் சந்தம் வாரிக் குங்குமக் குறடு வீசித்
தத்துநீர்ப் பொன்னித் தென்பாற் றாதலமுழுதும் போற்றும்
வித்தகத் திருமா ணிக்க வியன்பொருப் பதனைக் கண்டான் க௯

கண்டபின் னனைய வெற்பைக் கண்ணிணை குளிர நோக்கித்
தெண்டனிட் டடியின் வீழ்ந்து சிந்தனை மகிழ்ந்து போற்றி
யெண்டிசைப் பொன்னி மூழ்கி விரைவுமீ தூர வெய்தி
யண்டர்நா யகனைப் போற்று மாசையா லங்குச் செல்வான் ௨௰

அத்திரி வியாதன் காத்தி யாயனன் பரத்து வாசன்
வித்தகத் ததீசி கௌதம் மேவிய பிருகு மேலோன்
புத்தமு தாச னிபபோப புனிதன்மா தவங்கூர் கற்கி
யித்தகை முனிவ ரங்க ணிருந்தவ மியற்றக் கண்டான் ௨க

அன்னவர் தம்மைப் போற்றி யனுமதி பெற்றுச் சேடன்
முன்னவன் சிகரத் தேறி முதல்விசந் நிதிக்குத் தென்பாற்
றன்னுடைக் கரங்கட் மாற் றடாகமொன் றமைத்து மூழ்கிப்
பின்னாமும் முறைசூழ் வந்து பெருந்தகை கோயிற் புக்கான்

புகுந்தடி வணங்கிக் கண்ணீர் பொழிபமெய் புளகம் பூப்ப
மிகுந்தபே ரன்பாற் போற்றி வெய்யவன் தீர்த்தந் தன்னைத்
திகழ்ந்தநூற் றெடடுக் கும்பா இவ்பலிங் கத்துக் காட்டித்
தகும்புது மலர்கள் கொண்டு தற்பரன் றனைப்பூசித்தான் க௩

பூசனை புரிந்த வேலை புண்ணியன் கருணை பூத்து
நேசமுற றெதிரின் றேத்து நெடும்பணி வேந்தை நோக்கி
யாசையா யினையா மீது மறைதியென றருள வன்னோ
னீசனே யெந்தாய நின்றட் கினியவன் பென்றும் வேண்டும்

ஆயினு மேருக் குன்றை யனிலவ னலைக்க யதனு
நாயக நிமித்த மாகி நண்ணிய வனைய தீமை
போயகன் றிடுதல் வேண்டு மென்னனும புனித னல்கி
யேயுமவெள் விடைமே லுற்றோனிலிங்கத்துட்கரந்தானன்றே

சேடன்கூர் மகிழ்வினுற்றன் சிகாமணி யினைத்தொன்றை
யாடகப படிமே லீசாக கணிவிளக் காக வைத்துத்
தோடவிழ் கொன்றை யெம்மானறுணைபடிக்கமலம்போற்றிப்
பீடைத் தனது செம்பொற் பெருபதி புகுந்தான மன்னோ

கள்ளவிழ மலர்பபூங் காவிற கற்பகக் காவு மானி
னௌளருங் காம தேனு வெனபதும புனரி தனனுட்
டளளருஞ சீமபால வெள்ளத் தடங்கட லதுவும போல
வள்ளல்வாழ் திருமா ணிக்க மாலவரை சிறந்த தன்றே க௭

தீதினமந திரத்திற காயத திரிபுந்தின் னிபதந் றத்துப்
போதவிழ பொதுமபாருழுநத பொனனெடுங குவடு மாறறுண
மேதகு கனகை யாறும் வேந்தருண் மனுவும போல
மாதவர் புகழுமா ணிக்க மாலவரை சிறந்த தன்றே க௮

அரியதிரு சுவைக டம்முளமிர்தமு மாத ராருட்
பொருவிலா விமைய மீன்ற பூங்குழ லணங்கும் வாச
விரியல ரவற்றுட செம்பொன் மேதகு கமல முமபோல்
வரமிகு திருமா ணிக்க மால்வரை சிறந்த தன்றே க௯

அருவிபாய் மேருக் குன்றத் தாயிரங் குவட்டி னொன்றும்
பொருவிலா விங்கோ யாதிப் பொற்சிக ரங்க ளைந்தும்
முறைசெயி னதிக மாகு மோதிய வவற்றி னொன்று
மருவளர் திருமா ணிக்க மால்வரை சிறந்த தன்றே ௨௰

தொழத்தகு கன்னி மாதச் சுக்கில பக்கத் தூற்ற
விழுத்தகு சதுர்த்தி தன்னின் மேதகு நாக தீர்த்தத்
தொழுக்க முற்றடி னோர்க ளுமாபதி யன்பர்க் கின்னு
விழைத்தவத் தீமை நீங்கி யிமையவர்க் கிறைவ ராவார் ௨௧

சூரிய னுண்டந் தன்னிற் சூரிய னுயர்வா ரூதி
லாவமிக் காடி னோர்க ளருபிணி யெவையு நீங்கிப்
பாரிடை நெடிது வாழ்ந்து பரமபரன் கருணை தன்னாற்
சீர்கெழு சுவர்க்க மேவிச் செவ்வமுற் றிருப்ப ரன்றே ௨௨

பொறிப்பணப் பாந்தள் வேந்தன் பூசனைப் புரிந்து பெம்மான்
றிறத்தருள் பெற்ற காதை செப்பினர் தெளியக் கேட்போர்
கறைக்களத் தாகந் தன்னாற் கதுவுத வினைப்ப பாரமேன்
மறுக்கமற் றிருந்து நாதன் மலரடி நீழல் சேர்வார் ௨௩

ஆதிசேடன் பூசனை புரிந்த சருக்கம்

முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் ௨0௨



# ௯-வது இந்திரன் சாப விமோசனச் சருக்கம்.

---

கலிநிலைத்துறை

என்று சூதமா முனிவர னிசைப்பமா தவத்தோ
னன்று நீயினி யுயர்புகழ் நாகநாட் டிறைவ
னின்று பாவவி மோசனஞ் சொற்றிடு கென
வொன்று மனபினு லமமுனி வரனெடுத் துரைப்பான் க

கலிவிருத்தம்

ஆறைகடல் கடைந்தபுத் தமிர்தம விண்ணவர்
பெறுவதற் கெண்ணிமுன் பிறங்கல் மந்தரஞ்
செறிவுறு மத்தெனச் சேர்த்தி வாசுகி
முறைதிரி நாணென முற்றுஞ் சுற்றியே உ

வானவ ரொருதலை மற்றை வாலைவிற்
றானவ ரொருதலை தமது செங்கையான்
மோனமெய்த் தவத்தினீர் முறுக வீர்த்தலும்
பேனமுன் னமுதிரைப் பெற்றி கண்டமால் ௩

தோடவிழ்ந் திளநறுந் துளிக்குந் தாமரைக்
காடுபூத் தனையவன் கையி ரண்டினால்
ஈடுறப் பற்றிநின் றீர்த்திட் டானதிற்
பீடுறப் பிறந்தன பெற்றி முற்றுமே ௪

மருப்புநான் குடையமாக் களிறு வாம்பரி
தருக்குல மணிக்குவை சங்க மியாவரும்
விருப்புறு நிதிகள்வார் வீசி விம்மிய
வருப்பிள வனமுலை யரம்பை மாதரார் ௫

அம்புயா சனத்தில்வீற் றிருக்கு மாயிழை
யிம்பர்வா யகலிகை விளங்கு வாண்மதி

யிமையா ரேக்குறு மினிய புத்தமு
தமரரு மகிழ்வுற வுதித்த தென்பவே ௬

வண்டுழா யலங்கலான் வான வேந்தனுங்
கொண்டிற லதுபெற வுவந்து நல்கியே
தெண்டிரைப் பிறந்ததெள் ளமுதொ டைந்துபூம்
புண்டரீ கைப்பகம் பொலிய வைத்தனன் ௭

தெள்ளறல் படநெறி செறிந்த நீக்கரு
மள்ளிருள் குடபுக வலங்கல் வேந்துதேன்
றுள்ளிகொள் காரினைத் துறந்து காவெலா
மௌளிய கருங்குழ லெழிலெ றிப்பவே ௮

முற்றுறு விளமதி முகிழை யேசிவான்
விற்றிறம் பழித்தவில் வீசு பட்டமு
முற்றபொற் சுட்டியு மொருங்கு சேர்சிறு
நெற்றிநோக் கினர்பிர நிறையொ டுண்ணவே ௯

இருவகடற் றிரைபினை யிகழ்ந்து காமவேள்
பொருங்கைச் சிலைபினைப் போன்று வேப்பிலைக்
கொருங்கிணை போக்கத் திரைக்கக் கொத்துறு
கருங்கொடிய புருவமோ கனிந்து காட்டவே ௰

சேலெனப் பிறழ்ந்தரி சிந்தி வெம்முனை
வேலென மிளிர்ந்துமான் வெளக வெண்டிலாக்
கோலினை யொத்திரு குவளை வென்றகண்
மாலபுரிந் தனங்கற்கு வாகை சூட்டவே ௰௧

எள்ளிளம் பூவினை யெள்ளி மென்குமி
ளொள்ளிய போதைவென் றெழுந்து பொற்கொடி
தள்ளிய நாசிபச் சோந்தி தன்னுருக்
கள்ளியல புரிந்தொளி கனிந்து காட்டவே ௰௨

வண்ணமென் கபோலமோ ரிரண்டு மாசவே
கண்ணடி யாமெனக் கவின வார்ந்திலங்க

தண்மேனோம் வள்ளையந் தண்டு மூசனு
நண்ணிய காதென நலம்ப டைப்பவே ௧௩

தொண்டயங் கனியுங்கிரு சுகமுந தோழமை
கொண்டசெம பவளவாய்க குமுதம வென்றிடத
தண்டள வதநிள முகையைத தண்ணகை
வெண்டா ளதடெதாடும வெனறி கொளளவே ௧௪

மறுத்துடைத் தொளிதிகழ மதியின் வடடமு
நறைக்கம லததலர நலனு நாணுற
நெறிபட நோக்கியோா நெடுஙக ணேக்கெலாரு
சிறைபடுத தியமுசஞ் செவவி காலவே ௧௫

நாகுடன் பழகுபு நானம பூசிமென்
பூகமொத் தருபணி கடைநத பொறபின
தாகுநன கழுததணி யணிநத மபைமா
ரோனைகொண டேததநீ டொளித ன்ழககவே ௧௬

வேயினைப் பழித்ததோள விலகி விலலிட
வேயுமுன கைகளயா மெழிலக வற்றிடச
சேயொளி யஙகைசெங காநதள போனமென
வாயுமெல விரலகெளிற றழக ளிககவே ௧௭

பொருபபொருங கசசினைய பொருது பூரிதது
மருப்பினைப பழிததுவெள மருட மாமெனக
கருபபுரக சலவைகை செய்த பூண்முலை
யுருபபசி தனையு முளமு ருககவே ௧௮

ஆலிலை தனைவெறுத் தரிகை போன்றொரு
நீலரோ மாவரை நிலவ ரேகைமுன்
னோனுறு திரையென விலக சீாசசுழி
மானுறு முநதியேல் வயிறு பொறபவே ௧௯

மின்னென நுடங்கிமென கொடியின் வீறழித
தின்னதிங் கெதுவென வெவாக்குங் கண்ணுறு

தன்னநுண் ணிடைகளை யஞ்சும் வல்லவன்
றன்னைமொத் தலர்முலை தாங்கி னையவே ௨௰

வாளராப் பணமென வயங்கு தேரெனக்
கோளிலாப் பசும்பொனாற் குயின்ற தட்டென
வேளையா ளாகவே விற்கு மல்குல்வண்
காளையா டவர்களைக் கருத்து ருக்கவே ௨௧

வாழைத்தண் டெனத்திரண் டுற்ற வான்றுடை
வேழத்தின் றடக்கையை வென்று வீறுற
வாழத்தண் புனறிரி யலவ னொத்துல
கேழுக்கு மான்முழந் தாளி ழைக்கவே ௨௨

சினைவரால் வென்றுவேள் சின்னம் போன்றுமெய்
முனைவரா னவர்களு முடிவ ணங்கவே
புனைகுலாந் தூணியைப் பொருது பேரெழில்
கனியுமா றிருகணைக் காலவி ளங்கவே ௨௩

பரடுபொற் றராசினைப் பழித்து வீறுறப்
புரைதவிர் புறவடி யாமைப் பொற்புற
விரல்செழும் பவளத்தை வெல்ல மெல்லுகிர்த்
தரளமொத் தடிபஞ்சின் றகைமை காட்டவே ௨௪

நின்றன ளகலிகை நின்ற காலைபி
னன்றறி கோதம னயத்தை நோக்கியே
மன்றவந் துளவினை கொடுப்ப வாசவ
னின்றெனக் களித்துயி ரெனக்கு நல்கென்றான் ௨௫

வாசவ னத்திறம் வகுப்ப மாயனு
நேசமுற் றீம்புன னெடிதீ மூழ்கினே
ராசையிற் கொண்மினென் றறைய வாங்கவ
ரோசைபெற் றுறுபுன லொருங்கு மூழ்கினர் ௨௬

வெள்ளைவா ரணப்பகட் டுழவன் வெள்ளநீ
ருளபுகுந் தோய்ந்தன வும்பர் தோன்றினன்

பள்ளநீக் கிடந்தனன் பாசி கோரையுந்
தள்ளல் பாய்ந்திட முனி யநேக கற்பமே ௨௭

மொய்குழ லகலிகை போக வாரிபோ
லொய்யென வாரியி னாழி மூழ்கினை
பொய்தப வினியவள் போக வாரியிற்
செய்தவ மூழ்கென்றான் றிகிரி தாங்கினான் ௨௮

இவ்வகை யிசைத்தலு மெழுந்து மாதவன்
மௌவலங் குழலிபை மணந்து மற்றவள்
செவ்விய புணர்நல திளைத்துத் தேகங்கெடாத்
துய்வகை யவ்வயி னுறைந்திட் டானரோ ௨௯

அன்றுதொட் டகலிகை யநேகம் பூண்டியா
குன்றென வருமுலை கொடுத்த காமநோய்
தன்றலை மேற்கொளத் தளர்ந்து வாசவ
னென்றல பற்பல வுளத்தி லெண்ணுவான் ௩௰

பஞ்சஞ்ச மலரடிப் பாவை தன்னையோர்
வஞ்சஞ்செய் தாயினு மணத்து மிபாமென
நெஞ்சங்கொண் டுருக்குயி னொரு மாறுகொண்
டஞ்சநதுஞ் சிருளிற்கூ யாத்திட் டானரோ ௩௧

வரிக்குயி லுருக்கொடு வந்து கூவலும்
பொருக்கென வெழுந்துநற் புனித மாதவன்
குருக்கிளா நதிக்கரை குறுகித் தண்புனற்
றருக்கொடு துயிலுமத் தன்மை கண்டனன் ௩௨

மெய்முனி ஞெசமீ தென்று மீளலும்
பொய்ம்மையி லுவனுருப் புணர்ந்து வாசவன்
கொய்மலர்க் குழலியைக் கூடும் வேட்கையாற்
கைமலர் பற்றினன் கரிசு பற்றினான் ௩௩

வாசறு முனிவனக் காலை யெய்தலும்
பூசையாய்ப் போந்தனன் போத மாதவன்

கோசமா யிரம்பெற வென்று கோபித்தான்
வர்சவ னவ்வகை மாசண் டானரோ

பூம்புனற் பொய்கையுட் போந்து நாணிறுற்
றேமபொதி தாமரைச் செவ்வி யாரிதழ்
தாமபொதி பொகுட்டினிற் றங்கி னான்புரத்
தோம்புத லின்றிவிண் ணுலக மைபவே — கூ௫

பூங்கொடி தன்னையும் புனித மாதவ
னீங்கருங் கலவியி னெறியி னுவிவன்
றீஙகுசெ யிநதிர னென்று தேரியு
மாஙகுடன பட்டனை பேதை யாதலால் — கூ௬

கல்லுருக் கொண்டிவண் கிடத்தி காகுத்தன்
மெலலடித் துகளுறும வேலை காறுமென்
றல்லலுற றிடசசபித தறவ னீங்கினு
னெல்லையில பருவமெல வியலும வைகினள் — கூ௭

இறைமக னின்மையி னீண்டு தநதிருக
குறைபட வானவா குழாமுங் குன்றின
வுறுமழை யொழிதலா லுண்டி யின்மையா
லறைகடலுலகமு மழுங்கி னொநததே — கூ௮

விண்ணவர் குரவனு மெலிவை நோக்கியப
பண்ணவாக் கிறைவன் பழியி னீங்குமா
றெண்ணினன் பொயகையுள கரைப யெய்திவா
னண்ணலைக் கூவினு னனபு கூரவே — கூ௯

மந்திரி கூவலும் வான வேநதனு
மநதமி லுவகைபா லருகு நண்ணுதற
கெநதைசா பததினு லேதமுற்றுநா
னைநதன னீகவொணு நாண்ட டுததநதே — ௪0

வருவதன் முன்னமே மாசு றுவகை
பெரிதுகாத தியல்வது பெருமை யவ்வகை

யொருவினை யினியெஃ தொழித்தற் கோர்வது
கருமமென் றுரைத்தனன் ககன வேந்தனும் ௪௧

னன்றென மனங்கொளா நாண நீங்குறச்
சென்றெதிர் வணங்கினன் வணங்கிச் செல்வநீ
யின்றெனக் கினியருள் புரிதி யென்னவே
ஒன்றல பற்பல வுரைத்திட் டானரோ ௪௨

உரைத்தலுஞ் சுரர்குரு வுவந்து வீசுவெண்
டிரைக்கட லுடுத்தவித் தீவிற் றெய்வதப்
பருப்பதம் பற்பல பதிகள் பற்பல
மருக்கிளர் நதிபல வருந்த லென்கொலாம் ௪௩

வெள்ளியங் குவட்டொடு விளங்கு மந்தரம்
வள்ளல்வீற் றிருந்தருண் மல்லி கார்ச்சுனங்
கள்ளவிழ் பொதும்பர்கற் குடிவிண் காளத்தி
யெள்ளருங் கழுக்குன்ற மிடப மால்வரை ௪௪

அருணையங் கிரிதிருத் தணிகை யார்மலர்த்
தருவளா கொடுமுடி தாவி லாதநற்
றிருவளர் கொல்லிநற் றிருச்செங் கோட்டொடு
பொருவிலீங் கோய்மலை பொதிய மால்வரை ௪௫

பழமலை சிராப்பளி பழனி மாமலை
விழைவுறு பரங்குன்று வியன்ம யேந்திரந்
தழைகெழு பொதும்பர்சூழ் சைய வெற்பொடு
குழகன்மே வியதிரி கூட மால்வரை ௪௬

ஏடவிழ்த் தளியின மினிதி னேழிசை
பாடலும் புதுமதுப் பாயுஞ் சோலைசூழ்
கேடில்கே தாரம்வான் கிளருந் தண்பொழிற்
பீடுறு மாதனப் பெரிய நீள்வரை ௪௭

கன்னலுந் தேறலுங் கனியு மாமெனச்
சொன்னலந் திகழ்வரைத் தோகை தன்னொடும்

பொன்னிலங் கவிர்சடைப் புனிதன் வாழ்வுறு
மிந்நில வரைகளு மினிதுண் டாமரோ ௪௮

வாநதி காளிநதி வாணி பற்குனி
சரயுவா னதிதிருப பெண்ணை சங்கமா
ருவைபெரு கண்டகி யோடு தண்புனற்
புரையிலகோ தாவிரி புனிதநீப பமபை ௪௯

துஙகபத் திரைநவில சோணை காவிரி
பஙகவா ரிதிபுனற பாலி மாநதி
பொஙகுதண் புனலவகை பொருநை யெமுதற
சஙகமா நதிபல தாமுண டாமரோ ௫௰

காசிவீ மேசுரங காஞசி மாநகா
தேசுலாஞ் சிதமபரந திருககு டநதைநம
மீசனு ருகநதரு ளிலபிய மானைககா
வோசைகூா மறைவன முறறு வாஞசியம ௫௧

வயஙகுவெண காடிடை மருத மாநதுறை
நயஙகொளசீா காழிமா யூர நனனிலம
வியநதிடு நாகைநள ளாறு வீறுசால
பயனபுரி நெநவையை யாறு பாமபணி ௫௨

ஆனிலை யுயரவி ஞசி யனபிறை
கோனுறை மகோதைகிழக கோட்டங கூடலூர
தேனுலாம வெய்வனஞ சேது வேமுதல
வானவ னமாபதி மறறு முண்டரோ ௫௩

ஆதலாற பருபபத மனைததுஞ சூழ்வநது
சீதநீர் நதியெலாஞ சென்று மூழ்குபு
காதலாற பதிபல கண்டு கைதொழு
தேதநீ போக்குதி யிரங்க லெனகோலாம் ௫௪

இருநதவம் புரிநதுளோர்க் கெய்து றுகதெ
னருநதிறற கொறறமு மளவில் செல்வமுந

திருந்திய ஞானமுந் திதின முத்தியுந
தருமுயர் கற்பகந் தவமென் றோதியால் ௫௫

இன்னண மந்தண னியம்ப வானுளோர
மன்னனும் வந்தடி வணங்கி வாய்மையான்
முன்னவன் பதமலர் முடியிற சூடுவா
னன்னவ னுறைபதி யனைத்து நண்ணினான் ௫௬

எய்திவா னவாக்கிறை யாண்டு பறபல
செயதவம புரிந்தனன் செலலுங காலையி
லுய்யுநா ளெய்தலு மோங்கு மாணிககச
சையநோ கணடனன் றளாசசி காண்கிலன ௫௭

அறுசீரடியாசிரியவிருததம

காண்டலு மகவா ஞெககிக்காகம லஙகள் கூபபி
பூணடெழு மனபாற பொனனி மூழகிமுன றலக மெததரு
சேண்டொடு திருமா ணிக்கச செழுமலைச செமபொற கோயி
லீண்டொளிப பிழபபை யுறறு னிருமையுமபெறறு ஞெறறுன

முமமுறை வலஞ்செய தனஞெனை முடியிஞற படியிறறுழந்தே
யமமலை தனனி னேறி யணணலசந நிதியிற பினனுந
தெம்முனை கடநத வேநதன சேவடி வணஙகிப போறறி
மெய்பமயிா முகிழபப னோககி விழிகணீா பொழிய நினறுன்

நின்றவன மீடடு மீடடு நிததனை வணஙகிப போறறிக்
கொனறையஞசடையோனீண்டுகுடிகொணடு வாழவுமெனனறே
யொனறிய வுளதத ஞகி யுறுதவன சபிதத சாப
மின்றெமக் கொழிப பதிந்த விரத்தின கிரியெனறோநதே கூடு

வசசிரப படையி னுலம மாணிக்க வரையின் பாஙகா
செச்சையங கலவை மார்பன் றீாததமொனறமைததவவெறபி
னுசசியிற றேவ தீாத்த மொனறுமகண டெமபர் வேலை
யசசுதன் மதிக்க வநத வமிர்ததா னிறைதது மாதோ ௬௧

பைந்துழாயலங்கன் மாயன் பாறகடல கடைநத வஞ்ஞா
றைநதரு வுடன்வந் துறற வாயவேம புமைக்கீ சானச

சந்தரத் திசையி லூன்றிச் சுதையினற் பூர்த் தன்பாற்
சிந்தையின் புறவி லிங்கஞ் சிறப்புடன் ருபித் தன்றேன். கஉ

மறிதிரைப் பொன்னி மூழ்கி வச்சிர தீர்த்தந் தோய்ந்து
வெறிகமழ் தேவ தீர்த்த மீபன்றடம் படிந்து முக்க
ணிறைவனை வலஞ்செய் தேத்தி யிமையமா தினையும் போற்றி
நறைகமழ் நிமப நீழ லண்ணியஞ் செழுத்து மோதி கங

விண்ணவர்க் கிறைவன் வேத விதிமுறை வழுவா தன்போ
டெண்ணெகிழ்ந் தவனை மேற்கொண் டுயிர்க்குயி ராகு முக்கண்
பண்ணவற் றொழுது போற்றிப் படிமவே டத்த னாகிப்
புண்ணிய தேவ தீர்த்தப் புடையினோர் குகையின் வைகி கச

இடையுறு பிகலைபும் வாயு வியங்காத படிம டக்கி
யடியினு ரனலை மூட்டி யந்நாடி யிடையே போக்கி
முடிவிலா ரமுது தேக்கி முபறிசியொன் றுனு மின்றித்
தடையிலாப் பிரமா னந்தத் தன்மய மாகி யுற்றான் கரு

பருவமொன் றினைய வாறு பண்ணவற் கிறைவன் வைகத்
திருவிளம் பிறையுங் கங்கைச் செம்பொனின் முடியு மல்க
வருள்பொழி முகமு மாறு மடல்கெழு பாசு மேந்தி
கதல மலருங் காள கண்டமுங் கவின்கொண் டோங்க கசு

புலியத ளசைத்து வெய்ய பொறிப்பணப் பணிகள் பூண்டு
நிலவொளி பரந்தா லென்ன நீறுமெய் விளங்கப் பூசி
யிலைப்பயி லிதழி மென்பூ வேடவிழ் தெரியல் சூடி
மலைமக ளொருபால வைக மால்விடை மீது வந்தான் கஎ

வரதெதிர் தோன்றி நின்ற வள்ளலை வான வேந்த
னரதமி லுவகை கூர வடிமலர் முடிமேற் சூடிச்
சிந்தனை மகிழ்ந்து மீண்டு சேவடிக் கமலம் போற்றி
பெந்தையே யுய்ந்தே னென்ன வின்னணம் வழுத்து கின்றான்

புரிசடை முடிமேற் கங்கை புனைந்தருள் குழகா போற்றி
யுருவிலி யங்க வேனை யுருத்தகண் ணுதலாய் போற்றி

பருதியு மதியு மாகும் படரொளி விழியாய் போற்றி
யருமறை யனைத்துஞ் சாற்று மத்தனே போற்றி போற்றி௬௯

சங்கவார் குழையுந் தோடுந் தரித்தரு ளிறைவா போற்றி
வங்கவா ரியினஞ் சுண்ட மணிமிடற் றமலா போற்றி
சிங்கமா யெழுந்த மாலைச் சிபபுள்ளா யடர்த்தாய் போற்றி
வெங்கண்மான் மழுவே டேந்தும் விமலனே போற்றி
போற்றி ௭௦

அருந்திற லேனக் கொம்பே டாமையோ டணிந்தாய்போற்றி
இருந்துணை மணிக்கச் சாகச் சீறர வசைத்தாய் போற்றி
பொருபகை மேற்கொண் டுற்ற புலியத ளுடுத்தாய் போற்றி
கருங்கயத் துரிவை போர்த்த கடவுளே போற்றி போற்றி ௭௧

தூயபல கோடி வேதந் தொடுகழல விசித்தாய் போற்றி
மாயன்கண் ணிடந்து சாத்தும வனசச்சே வடியாய போற்றி
காயமு லெனன வந்த காலனைக் காய்ந்தாய போற்றி
தேய்வுற மதியந் தேய்த்த செல்வனே போற்றி போற்றி ௭௨

முப்புர மெரித்தாய் போற்றி மூலகா ரணனே போற்றி
திப்பிய வடிவாய போற்றி தேவாதி தேவே போற்றி
யொப்புமை கடந்தாய் போற்றி யுறுதவப பயனே போற்றிக்
கப்புடைச் சூல வைவேற் கரத்தனே போற்றி போற்றி ௭௩

அக்கர வணிந்தாய் போற்றி யகிலமு மானாய போற்றி
செக்கர்வா னிறத்தாய் போற்றிச் செங்கண்மால விடையாய்
போற்றி
நக்கனே போற்றி யென்னை நயந்தருள் புரிவாய் போற்றி
தக்கன்றீ வேள்வி சாய்த்த சப்புவே போற்றி போற்றி ௭௪

வெள்ளியங் கிரியின் வைகும் விண்ணவர் தலைவா போற்றி
யுள்ளொளி யாகி நின்ற வொருவனே போற்றி வாசக்
கள்ளவிழ் கடுக்கை மாலை காதலித் தணிந்தாய் போற்றி
தெள்ளிய சாம கீதச் செல்வனே போற்றி போற்றி ௭௫

வெண்பொடி யணிந்தாய் போற்றி வேதநா யகனே போற்றி
தண்பிறை முடித்தாய் போற்றி தற்பரப் பொருளே போற்றி
பெண்கண்வா னவன்க டால மோந்துபிரு ளுகனே போற்றி
நண்பனே போற்றி யார்க்கு நாதனே போற்றி போற்றி ௪௯

திருமுடித தழும்பா போற்றி செழுமலைக்கொழுந்தேபோற்றி
பொருதிரைப் பொன்னி நன்னீர் பொசிவாசி கொள்வாய்
போற்றி
வரையகம் பகிாந்துகாட்ட வாட்போக்கி மகிழ்ந்தாய் போற்றி
துரிசறு மடியா ருண்ணுந் தூயசெங் கனியே போற்றி என

இததிறம வான வேநத னிருகணீ ரருவி பாயக
கைததல முகிழநது மேனிக கமபிதஞ செயபப வன்பாற்
பததிமை மேனமே லோஙகிப பணைத தெழுப புளகம பூப்ப
நிததனைப போறறி நினறு னிறறனு நிமலன சொலவான ௭அ

நெஞசகத தனபினு னீபுரி நியமத தானு
மஞசெழுத தோதி யோகத தமாநதிடு நிலைமை யானுஞ
செஞசொல கூா துதியி னுலுா திருவுள மகிழநதோம
வண்டு
செஞசலில வாஙக ளெலலா மியயபுதி யீய்து மெனமுனி ௭௯

முனனாநின் கருணை யால்வான முறறுறு வரஙகளி யாவை
யனனவை யொழிக மேலா மருநதவண சாப நீஙகப
பனனகா பரஞ வினறு பாலிததல வேண்டு மெனனச
சொனனகா வலறகுப பெமமான சுரநதருள பொழிதல் செய்
வான் ௮0

அலாகதிாப பருதி வெமமை யாறறினு மாத வததி
னிலைகெழு வானு கதகி னிறபதிற கரிதா லவவா
றுலகினி லெமகதத தீமை யுஞறறினு முபவ ருபயார்
குலவுநா தொழுமபு பூண்டோா கொளகையிற பிழைத்தா
ரன்றே ௮௧

ஆதலா னம்பா லன்பா லருந்தவன் சபித்த சாபம்
போதவே யரிதென் றாலும் புரிந்தநின் பத்தி தன்னாற்
காதலா லிவைக ளெல்லாங் கமலம்பூத் தனைய கண்ணாய்
நீதியிற காணத் தந்தே னின்பதி யடைதி யென்றான் அ௨

என்றலு மிமையோர் வேந்த னிறைவனை யுமைபா ளோடுஞ்
சென்றெதிர வணங்கிப் போற்றிச சிந்தனை களித்து மீட்டு
மொன்றல பலவும் போற்றியுரைத்தவித் துதிபைசசொற்றோர்
நன்றுறப் புரிதி யென்று னம்பனு மதற்கு நேர்ந்தான் அ௩

சோதிலிங் கத்தி னூடே தோன்றலபுக் குறைய வேந்த
னீதியின வணங்கி நெஞ்ச நிருமல னிடத்து வைத்தே
மாதவா விண்ணோ ரூழ மடங்கலந் தவிசி னேறி
வேதனை யெவையுந் தீர வீற்றிரு னிருந்தா னன்றே அ௪

இந்திரன் சாபந் தீர்ந்த விபபெருஞ் சரிதை தன்னைச்
சிந்தனை மகிழ்ந்து கற்றோர் தெரிவுற வெழுது கின்றோர்
அந்தமி லூழி கால மகிலமும புரந்து மேலாஞ்
சந்திர மௌலி பாதத் தாமரை நீழல சேர்வார் அ௫

இந்திரன் சாப விமோசனச் சருக்கம்

முற்றிற்று.

ஆகத திருவிருத்தம உ௰௫.



# ௭-வது இடபூசித்த
# சருக்கம்.

---

### அறுசீரடியாசிரிய விருத்தம்.

சுரபதி சாபந் தீர்ந்த தாயமாக் காதை முற்றுந்
தெருளுறத் தெரித்தா யிப்பாற் செங்கதிர்ப் பருதி தீர்த்தப்
பெருமைநீ யுரைத்தி யென்னப் பெருந்தவ ருரைப்பப் பெம்மா
னிருபத முளரி யேத்தி யியம்பினன் சூதன் மாதோ ௧

ஒழுகொளி வீசுஞ் செய்ய வுதயமால் வரையின் பாங்கர்
வழுவிலா வளங்க ளெய்து மந்தேகத் தீவி லங்கண்
முழுவலித் திரடோள் வெற்றி மூரிவெம் பரக்கர் விண்ணோர்க்
கழிவுசெய் துழலுந் தீயோ ரழலெழ விழிக்குங் கண்ணார் ௨

கன்றிய மனத்தோ ரேழு கடலையுங் கடக்க வல்லார்
நன்றியொன் றறியார் பாரி னுப்பணுற் றெவையுந் தாங்கும்
பொன்றிகழ் சிகர கோடி பொலிந்துள வடபான் மேருக்
குன்றையுந் துகள்செய் கிற்பார் கூற்றுக்கோர் கூற்ற மன்னார் ௩

அத்திறத் தரக்கர் தோன்று மலர்கதிர்ப் பருதி தன்னை
முத்தலைச் சூலத் தானு மூரிவேற் படையி னானும்
பைத்தலை நாகம் போலும் பகழியி னானும் போர்செய்
தித்தலைத் தோன்று வண்ண மிடுக்கண்செய் திகழு நாளில் ௪

பேரொளி விரிக்கும் வெய்யோன் பிறங்குதே ரிறங்கி யோர்நாட்
போர்செய வாற்றா னாகிப் பொருவலி போக்கிப் போக
வோர்வகை யுணர்ந்து வானோ ரொருங்குவந் தெய்தி வெய்ய
காரிற வரக்கர்க் கஞ்சுங் கவலைநீ யொருவி யின்றே ௫

திங்களங் கண்ணிப் புத்தேள் சேவடிக் கமலம் போற்றிக்
கொங்கவிழ் மலர்கள் வீசிக் குடந்தம்பட் டிறைஞ்சி யேத்திற்

சங்கர னெதிரே தோன்றிச சமரிடை வெல்லு மாற்ற
லிங்குனக் கருளு மென்று லிமையவ ரெவரும் போனார் ௬

ஈசனைப் பூசை செய்தா லெதத்திற மாமோ வென்று
தேசுடைய பருதி வேநதன் சிநதனை கவலுங் காலை
பாசவே ரரிநது மேலாம் படிமவே டதத னுகு
மோசைகூர மகதி நல்யா ழுறுதவ னவண்வந் துற்றான் ௭

உறுதலும பதஙக ளேக்கி யுளத்திடை யுவகை பொஙக
மறுவறு முனிபா லெப்தி வானவ ருரைதத மாறற
மறிவுறுத திட்டு மனமே ளுஙகதற குபாயந தோநது
தெறுகதிரச சுடரை நோக்கிசசிவாசசனைமுறைமைசொல்வான்

விதிமுறை சிவனைப பூசை விககிர கஙக டமமிற
கதிரவலி லிஙகந தாறறல கடபொைத் திபிதுங கீல
மதிகமா மானு டதநி லாரிட மநிக மாகுந
துதிபெறு தேவ லிஙகந தனனினுந தூய தாமால ௯

தூயதிவ வியலிங கதநிற சுயமபுவே சுயமபு தனனி
லேபமா விரதன லிஙக மிரதநின லிஙகந தனனின
மேய்மா ணிகக மேலா மேருவில வருமா ணிககப
பாயொளி யிலிஙக மேயிப பாரிடத தநிக மாமால ௰

ஆதலாற றிருமா ணிக்க வசலதனை யடைநது பூசை
காதலா லுனபின் வநத கடுஙகுர லுருமு தனனு
லேதமின் றுகச செயதே யிராக்கதா தமமை வென்று
வாதவ கிளாதி யென்றே யாழமுனி போயி னுனால ௧௧

வரமுனி போய பினனா வானுரு மேறனை வானந
திரிபவ னினைபப வெய்தித திரைகட லேழும வெம்பிக்
குரைபுனற சுருக்குண டோம குண்டமொத தழல வோங்கும்
பருவரை யெனவையுந தியப் பகிரண்ட முடைய மாதோ ௧௨

வநதுரு மேறு முன்னோன் மலரடி வணங்க லோடுஞ
சிநதனை மகிழ்நது பெம்மான் சேவடிதொழுது பூசை

பெண்ணொரு பாகன் பூசை பேணுதி யென்றவ் வாறே
யுண்ணயந் திடியும் பூசை யும்பணுக்கியற்று மன்றே ௨௦

அன்று தொட் டென்றுஞ் சோதி யலாகதிரப் பரிதி வேந்த
மொன்றிய வசனி தானு முமையொரு பாகன் பூசை
நன்றெனப புரியு மாயி னலங்கொளத் தலத்தின மேன்மை
யின்றெவ ருரைபப தெங்ங னிணையதற கிலலை மாதோ ௨௧

விருபபுட னிரவி தீரதத மேதகு நாளில மூழகிக
கருப்புரத தீப மேற்றிக் கண்ணுத றனைவந் திததோர
பொருக்கென்ப பிணிக ளெல்லாம போகுவா போரில
வெலலவார்
செருக்குட லுலகங காததுத தேவரதம முலகுங் காபபார

பாரிடத திணைய காதை படிபபவா படிககக கேடபோா
போரிடைப பகைவை வென்று புவனமோர மூன்றும
போறறச
சீரபல பெறறு வாழநது தீபபிணி முழுதும நீங்கி
மாரன்பே ரழகு வாயநது வானுல காளவ ரனறே ௨௩

இடி பூசித்த சருக்கம

முற்றிறறு

ஆகத்திரு விருத்தம ௫0௩



# ௮-வது அகத்தியர் பூசித்தசருக்கம்.

---

கலிநிலைத்துறை

விந்த மால வரை யடக்கிய விழுத்தவக் கிழவன்
வந்து பூசனை யுஞற்றிய மானமிய லினிச்சொ
முந்த மால்வரை முனிவிர்காள் கேண்மினென் றுரைப்பா
னிந்த வானில முப்பதற் கிருந்தவச் சூதன ௧

இமைய மாலவரைக் குத்தரத் திசையினி லிசைகூர்
தமைய லானிக ரின்றிய தாபதர் குழுக்கொண்
டமைய வாழ்தரு புட்பகத் திரைக்கரை யடைந்தே
யுமைம ணாளன தருளினா லகத்திய னுறைநாள் ௨

ஆவ மீக்கொள் வந்தமா முனிவரன் றன்பா
ஞர் தபபெயா மாமுனி நண்ணுதல் புரிந்தே
யிர் நெஞ்சினு லிருவரு மளவளாய் வைகிப்
பாரிடத்தினிற் பதிபல தொழுதுமென் றெழுந்தார். ௩

எழுந்து காசபீ ரதமபிர பாசமு மிறைஞ்சித்
தொழுந்த கைத்தகே தாரமவில வாடவி தொழுது
செழும்பு னற்கங்கைத் தீரத்துக் காசிசென் றேத்தி
யழுந்து மன்பினுற் பிரயாகைபோ டவந்தி கைதொழுதே ௪

கும்ப யோனியு நாரத முனியுங்கோ மதியோ
டிம்பர் மேவிய தலங்களு நதிகளு மேத்தி
யும்பர் நாடுபோ யுறுவிந்தா டவியுறுங் காலை
வெம்புதீ விழிப் பிரேதமொன் றங்கணமே வியதே ௫

உற்ற போதினி லுளங்குழைந் தகத்திய முனிவன்
மற்ற விங்கிது முதநிவீ டெய்துறு மாண்பா

லற்ற மில்சிவ தலம்பல வணங்கி வந்தடைவ
னற்ற வாவென நாரத னோர்திசை நடந்தான்

தேன்று ளித்தனற றிபபிய மகதியாழ முனிவன்
றுன்ற னித்தனன் போதலுந தண்டமிழ்ச சலதி
யேன்று தெண்டிரைக் கடலினை பருகிய வெஙகோ
ளுன்ற வன்பினுற காவிரி நதிககரை யடைநதான் எ

அடைநத மாமுனி திருககடமு பநதுறை யதனைத
தொடர்நத வன்பினுல வணஙகுபு சுருதிரான முகததோன்
படாநத பேரொளி வேளவிசெய் ததிறம படைதத
தடங்கு லாவிய காவிரித தண்புனல முழுகி அ

நிறைநத வபபுனல் கொண்டுதண் குணடிகை நிரபபி
யறநத வாதவ னைநதெழுத தருணைறி யோதி
விறைநது பேரயபபிரே ததினிற றெழிதத்லும விலவேள்
சிறநத பேரெழில பெறறனன றிசையெலாம வியபப கூ

குறிய மாமுனி குணடிகைப புனறெளித திடலும்
வெறிய பிரேதமாங குமபனு குதலொரு வியபபோ
வறியிற காரிருட பிரேதபங குறுதலு மமபோன
செறியு மாமணித தீர்ததமான மியமெலாந தெரிபபார் க0

அததி ருத்தல பானமிய மளபபதற கெளிதோ
முததி யாவாக்குங கொடுததது முறைமையா லெனறுங
கததி கைககுழல பாகனவிற றிருபபனுற கடலகு
ழிதத ரதலத தெயபதி யிபபதிக கிணையே கக

குமப யோனியு மவவுழிக் குழைநதபே ரனபா
லும்பா போறறுறு முததா திசைமுக னுகி
நமபன் பூசனை செயயுதை யததெதிா நணணி
இமபர் வேண்டிய வரமெலா மியன்முனிக் களிததான் கஉ

உதைய காலையி லுமபர்கோன் றேன்றலா லவவூ
ருதைய மாபுரி யாயதிவ வுலகொலாம் போறற

வுதைய காலையி லொருமலர் தாமரைவதனத்
துன்றிய பானுவொத தொளிதிகழ் நாதனீ ரன்றே [illegible]

விடையின பாகனை விடைகொடு மேதகு முனிவன்
சடையின வானதி தரித்தகோன் மாணிக்கச சயிலத்
தடைவி னெய்தின னண்ணறகு மேற்றிசை யதன்கட்
டடையி லணைபொடு தண்டுறை றடாகமொன் றமைத்தான்

கங்கை யாதிய தீர்த்தங்க ளனைத்துமக் கணத்திற
பொங்கு தீபபுனற் றடமெலாம பொலிவுறத் தாபித்
தங்கை யாலவிந்தத் தகந்தைப் கடிந்தரு ளறவோன்
சங்கை யின்றியே முழுகினன சந்தி யடைந்தான [illegible]

அடைந்த மாமுனி யருச்சனைக் காயின வெல்லாம
படாந்த காதலா லொருவயிற பாங்குறத் தொகுத்து
மடங்க லேறுகைத்தன் பங்கனை மத்தியா னத்திற
றொடாந்து பூசனை புரிந்தனபா லெதிர்நின்று துதிப்பான் [illegible]

அறுசீரடியாசிரிய விருத்தம்

நேயனே யனபு தன்னு னெஞ்சிடை நினையா தோர்க்குச்
சேயனே யளவி லாத செல்வனே திகிரி தாங்கு
மாயனே முதலாந தேவா வணங்குமா ணிக்க வெற்பிற்
றாயனே மத்தி யானச சொக்கனே போற்றி போற்றி [illegible]

ஆதியா யனாதி யாகி யகண்ட பூரணமாய் மேலாய்
நீதியாய் நினைவுக் கெட்டா நின்மலா னந்த மாகி
யோதியா வையுமு ணர்ந்தோ ருறையு மாணிக்க வெற்பிற்
சோதியாய் மத்தி யானச சொக்கனே போற்றி போற்றி

ஞான்றுதேன் றுளிக்குங் கொன்றை நாண்மலர்த் தொடைய லோடும்
வான்றளிக் கங்கை யாறு மணிமுடிக் கணிந்தாய் போற்றி
யென்று பேரன்பு பூண்டார்க் கிடர்புகா வண்ணங் காக்குந்
தோன்றலே மத்தி யானச சொக்கனே போற்றி போற்றி [illegible]

முத்தனை யினைய வாறு மூதறி முனிவன் போற்ற
வத்தனு மெதிரே தோன்றி யகத்திடை வேண்டிற் றெல்லாஞ்
சுத்தனே மொழிதி யென்னத் தூயமா தவனு மன்பா
லித்தகை வரங்க ளெல்லா மியல்புறக் கேட்க லுற்றான். ௨௰

அஞ்செழுத் துண்மை யின்ன மடியனுக் கருளல் வேண்டும்
நெஞ்சிடை யன்பா லென்று நின்னைமத் தியானந் தன்னிற்
செஞ்சவே தெரிசித் தோர்கள் சிவகதி பெறுதல் வேண்டு
நஞ்சமு தாக வுண்ட நம்பனே யென்று பின்னும் ௨௧

துய்யனே மதத்தி யானைச் சொக்கனே யென்று நாமம்
வையகம் வழங்கல் வேண்டும் வங்குகாத் திகைமா தத்திற்
செய்யசெங் கதிரோ னுள்ளிற் செய்தவெண் ணீர்த்த மூழ்கில்
வெய்யதீப் பிணிக ளெல்லாம் விரைந்துடன் றீர்தல் வேண்டும்

அண்ணலை யனைய மாதத் தாருளோர் கோமயத்தை
வண்ணவான் சிரத்தில் வைத்து மற்றதின் மூழ்கி னோர்கள்
எண்ணிய னுதித்த பாட லியல்புற வழுத்தி னோர்கள்
திண்ணிய பவங்க ளெல்லாந் தீர்ந்துசீர் பெறுதல் வேண்டும்

என்று மறுகால் பாட வேடவிழ்த் திளந்தேன் பில்கு
மன்றலங் குழலி பாகன் வகுத்தவவ் வரங்க ளெல்லா
நன்றென மலையத் துற்ற நற்றவன் மகிழ நல்கி
பொன்றிகழ் புனித லிங்கம் புகுவீற் றிருந்தா னன்றே ௨௪

சாற்றுமிச் சரிதை தன்னைச் சந்தம் படித்து ளோர்க
ளுற்றிசைப் புவன மெல்லா நலம்பெறப் புரந்து பின்னா
கோற்றொடி யரம்பை மாதர் குவிமுலைத் தடத்தின் மூழ்கி
வீற்றினி திருப்ப ரம்பொன் விண்ணுல கத்தி லன்றே ௨௫

அகத்தியா பூசித்த சருக்கம்

முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் [illegible].

# ௰௩-வது உரோமசர் பூசித்த சருக்கம்.

---

குறுமுனிச சரிதை முற்றுங் கூறினை வேறு வேறு
வுறுதிகள் பலவுஞ் சொற்று யுயாதவச் சூத பின்னு
மறிவுறு நெறியி னுலே யுத்தல மான்மி யங்க
ளெறிபெறத் தமியேங் கேட்ப நேயமுற றுரைததி யென்றா

ர்தவ ரினைய வாறு வருததலும் புராண முற்று
மோதினன் குணாநத தூயோ னுரோமசன் சரிதை தனனும்
பாதிவெண் பதிடஞ் சூடுமெம்பரம்பரன் பாதம் போற்றிக்
காதலாற் றுறவின மிகக கடவுளாக குரைகக லுற்றுன ௨

திககிரு நான்குங் காககுந திரமிசன் வரத்தால வநத
தககவி ராச னடம்போ சமரவே லரசன றோனு
ளிகருவேள வனபுஞ் சேட னெனததகு மறிவு மெயதி
மைககடற புடவி யெலலா மனுவெனப் புரககு நாளில ௩

நாலிரு கோடி செம்பொன் ஞாயறு னெறியா லீட்டிக்
கோல்வளை யாம லோசசிக குவலயம புரக்கு நாளின
மேனுயர தருவைப் பற்றி வெறியபுல லுருவி யுற்றுற
போலவோர தூரததன் வநது புரவலன் றனனைச சார்நதான்

புதரிடை மறைநத வேடன் புளளினைச சிமிழ்த்தா லென்ன
விதமிவன் போல யாரே யியம்புவா ரலலா ரென்ன
சதமகன் குரவன் போலச சற்குண மெவைக்கும் வித்தாய்
மதவலி வேநத னுளள மகிழவுச சரிக்கு நாளில ௪

மநதிரித தலைவன் கூறு மாற்றங்க ளெவையுஞ் சாற்றச்
சிந்தூரத திலத மாதர் சேட்டைநூற் றிறமே செப்பிச்
சநதனக் கலவை மார்பன் சற்குணம் பிறழ்நது சாய
வநதமின் றுய லோகா யதனமத மறைதல் செய்வான் ௫

அழிபசிக் காற்ற னுகி யடவிக ளோர்டித்து மென்று
மழுவினும பளததல கூடா வண்சிலைக் கரியுந தீய
உழுவையே முதலவி லங்கி னூனசுவைத துண்டோ தீர
தெழுதரு முதராத தீயா லெரிபபுணடு நிழலு மினறி

உருததெழு மாத்பததா லுலைபபுண்டு சண்ட வாயு
முரிததடித திடலும பாரின பொததுண்டு நிசம மினறிக்
குருததுவிட் டெழுநதுகாட்டுங கொளுஙகனல்கனிநதுமாறுந்
தரிததிரத தழுஙகு வாரபோற றெருமநதுதயங்குஙகாலை ௧௫

விநதமால வரையி னகண பேலைநா ளறநதி னலெ
சநதிரோ தயம்போல வநது தவததினுக குறையுள னாகி
ஈநதுநீ பொறியும வென்ற வறிவுடை யுரோம சபே
ரெநதைதோன றுதலுந தீயோ னெரிபசிக கிஙஙகென்றுறறுன

மாமுனி தன்னைக் கண்டு மகிழசசியால வநதங குறறு
வேமமா ஞான மெய்தி யிணையடி இறைஞசி நிறபக
காமமே முதல வாய கடுமபகை யெனவ்வயும வெனற
கோமுனியனனெசெயதிருறிக்கொண்டஙகுரைககலுறறுன்

முன்னைய பிறவி தனனினமூாககனே யெண்ணில பாவந
துன்னினை யாகை யாலே சூழநதநின் னறஙக ளெலலா
மினனலகூா சூது வெஃகு மீனாதம பிலலம போல
மன்னுத லின்றி முறறு மாயநதன மாத ராலே ௧௮

கூறுதற கரிதாய் நீசெய் கொடியவெம் பாவத தாலே
வேறொரு வழியு மின்றால் விளைததவித திமைதீர
வாறெதிர பபிதத லாலே யண்ணறன் கருணை தன்னுற
பேறுதநதிடுது மெனனுப் பெருநதவ னுடன்கொண் டேறுன்

அஞ்சிறை வண்டு கிண்டு வலாகெழு மஞசி லோதிப்
பஞ்சின்மென் னடியாள் பாகன் பதிபல தொழுது போற்றி
மஞ்சிவா சோலை சூழ்நத மாநதி பலவு மாடிக்
கஞசமா மலரோ னன்னுன் காவிரி நதியைச் சார்நதான் ௨௦

உடன்வரும் பிரேத ரூபத் தொருவனை யொளிநீர்ப பொன்னி
படிவது செய்து தென்பாற பாயொளி பரப்பி யோங்கிப்
புடைவளர் பொதுமபர் மல்கிப் பூதலம பொலிக வநத
வடகயி லாய மொத்த மாணிகக மலையைச சாரநதான் ௨௧

காண்டலு மகிழ்சசி பொங்கிக கரகம லஙகள கூப்பி
யாண்டடை முனிவ னஙகே யவனொடும பணிநது போறறித்
தூண்டிய சுடரே போலத தோனறுமெளிற றிருககு மநதச
சேணொடு திருமாணிககச செழுமலைப பாஙக ருறறான ௨௨

மருபபினைப பழிததண் ணுநது மருஙகுளள வாஙக வோங்கு
மருபபிள முலைபாள பாக னமாநதினி துறையு மநதப
பொருபபினகீழ வரையின மேலாம புணணிய தீாததமொன்று
விருபபுடன வாயு திககில மேவரக் கணடு மாதோ ௨௩

இளபபிறை சூடிய பாநத ளிகலறப புனைநத மோலிக்
களங்கனி யனைய கணடன கருணையாற கஙகை யாதி
வளஙகெழு நதிக ளெலலாம வரபபுரிந தவனை நோககி
யுளஙகனிந தாடு கெனறு னுரோமச முனிவ னனறே ௨௪

பெருநதவ முனிவ னேவப பிரேதரூ பததைப பெறறோ
னருமபெருந தீாத்தந தன்னி லாடின னுடலேலாம
கருமபுகைச சிலையாக கொண்ட காமனே யிவனென றோத
விருமபுநல லுருவம பெறறான் விகடரூ பமுமொ ழிநதான ௨௫

காமனே யென்ன நினற காவலன றனனோ டனனோ
னேமநீள வரையி னேறி யிருஞசிறை வணடு கிண்டுந
தாமநேர் சூலி பாகன் றணைமலாச சரணம போறறி
சோமகற கருளல வேண்டுங் குழகவென் றேததுகின்றான்.

புலியத ளுடுததாய் போறறி பூதநா யகனே போறறி
கலியுக வரதா போறறி கண்கணமூன் றுடையாய் போறறி
வெலிபுலி மூன்றுங காகக வின்னருள புரிந்தாய போறறி
யொலிகடல் விடமுண்டெல்லா வுலகமும புரந்தாய் போறறி

முப்புர மெரித்தாய் போற்றி மூவரைக் காத்தாய் போற்றி
துப்புடை மத்த யானைத் தோலுடை யசைத்தாய் போற்றி
ஒப்புமை யில்லாய் போற்றி யுணர்பவ ருளத்து ளென்றும்
வைப்பெனப் பொதிந்து வைகும் வள்ளலே போற்றி போற்றி

கடுங்குரன் மானுந் தீய கணிச்சியுந் தரித்தாய் போற்றி
நெடுங்குவட் டினைத் துளக்கு நிருதனை யடர்த்தாய் போற்றி
யடுங்கொடுங் கூற்றை யெற்று மம்புயப் பதத்தாய் போற்றி
நடம்புரிந் தருளா நிற்கு நம்பனே போற்றி போற்றி உக

பூங்கணை தொடுக்கும் வில்வேள் புரம்பொடித் தருள்வாய் போற்றி
தீங்கரும் பென்ன நாளுந் தேனொடு பழகிக் கூவு
மாங்குயிற் குலத்தை வெள்கி வடித்தெள ளமுத மென்னப்
பாங்குறு குதலை நங்கை பங்கனே போற்றி போற்றி கூ௦

பிணியும் பணியு மூவாப் பிறையும்வெள் ளெருக்கு மாலும்
வன்னியுங் கொன்றைப் போது மத்தமு மறுகு நன்னீர்க்
கன்னியுந் துன்றத் தாருங் கமழுங் கூவிளமுஞ் சூடுஞ்
சென்னியிற் செவ்வனீர் பாயுந் திருமுடித் தழும்பா போற்றி

என்றின்ன பலவு மேத்தி யிறைஞ்சிய முனியை நோக்கி
நன்றுநன் றென்ன வீச னவலந் தீர்வுந் தொல்லாம்
வென்றிவே லரச னேவ வேதிய னூழி காறுந்
தன்றனிச் செங்கோ லோச்சித் தராதலம் புரந்து பின்னர் கூஉ

அலர்முலை மயிலஞ் சாய லரம்பையர் கவரி வீச
பொலனருந் தருவி னீழற் புரந்தர னாகி வைகி
வலந்தருஞ் சூல வேலு மழுவுங்கைக் கொண்டு நம்ப
னலம்பெறு கைலை வாழ நல்வரந் தந்தே மென்றார். கூங

பொருவறுந் திருமாணிக்கப் பொருப்பினுக் கிறைவைப் போற்றி
யிருவரும் விடைகொண் டேறா ரீசனு மிலிங்கத் துற்று
னொருவரை யனைய மாப னருந்தவ முனிவன் பாதம்
விரைகமழ் மலர்க டூவி மீண்டுமீண் டிறைஞ்சிப் போற்றி கூச

நீயனுப்பப் பிரேத ருடனுஞ் செறிந்திடுஞ் சிறியே னாகில்
பேயனும்த் திரிகுதேன் றன்னைப பெரிதுங்கை தூக்கியைய
காயனு ருள்பெற் றுய்ய நலகினை யிதற்குக் கைம்மா
றுயின தென்கொல யானுன் னடிமைக்கு மடிமை யென்றான்.

வேந்தனவ் வாறு கூறி விடைகொண்டு முனியைப போற்றிப்
போந்தனன் முனியு மந்தப புண்ணியப பொருப்பினைவிச
சாந்தணி குவவுக் கொங்கைத தையலோ பாகனை பாத
போந்தினை மலரக்கூவி யினிதுட னமாந்தா னன்றே ௬௬

பேசுமிக காதை சொற்றோ பெரிதெனை கேட்கு நல்லோர்.
நேசங்கொண் டெழுது வோரோ நீசசீருந தீமை யொரும
பாசங்க ளனைத்து நீங்கிப பாருலகாண்டு பின்னை
ஈசன்செம முளரி போலு மிணையடி நீழல சோவார ௬௭

உரோமசர் பூசித்த சருக்கம்

முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம். ௬௭௧



## ௧௦-வது திருவாட்போக்கிச் சருக்கம்.

### கலிவிருத்தம்

நல்லறம புரிந்தருண் ஞான மாதவ
செல்லொளி நீணமுடி யிறைவனை வைகிய
மலலலங் குவடுவாட் போக்கி யாயது
சொலலுக வென்ன லுரு சூதன் சொலலுவான் ௧

திருந்திய கோலினன் செய்ய வேலினன்
பொருந்தலர்க் கடந்திடும் பொருவி லாறறலான்
மருந்தினு மினியவன மாக ராதொட
ருநதிறற காமனே யனைய பொறபினன ௨

அருளினுக் குறையுளே யாய தூயவன்
மருளறு காடசியான வரமபில சீததியான
தெரிவரும பெருமையான் சிவனை நாடொறு
முரிமையிற பூசைசெய் துவநத சிநதையான் ௩

கல்வியுங பெருங்கடற கரைகண டுறறவன்
செலவமு நறகுணச சிறபபும பெறறவ
னெலலையி னுலகைககண் ணிமையிற காததரு
ளலலவன மனுபதி யனின மேலவன ௪

நகைநில வெறிக்குமவெண் ணளினப போதென
முகமலாந தருளிய முதத வெண்கொடை
யகலிட நீழலசெய் யானை போககின
னிகலறுஞ சூரிய வன்னி யென்பவன் ௫

### அறுசீரடியாசிரிய விருத்தம்

பின்னலவெண டாநக வேலைப் பெருங்கடல் வளாக மெல்லா
மன்னை போற் புரக்கு நாளி லகிலமு நடுக்க மெய்த
மன்னிய சிங்க வேறறின் வலிபதி னுபி ரத்தோ
டின்னல்கூர் மயிட னென்றோ ரிகல்புரி யவுண னுற்றுன் ௬

உறறகா ருவுணன் பன்னு ளுந்திபூத் தவனை நோக்கி
யூற்றவம் புரிந்தா னந்த நான்முகக் கடவு டோனறிக்
குறறமின ருக நீசெய் கோதிலாத் தவங்க ணோக்கி
யற்றமி லுவகை பூத்தா மாவமெவ வரதறி லென்றான் ௩

வேதிய னினைய கூற வெஞ்சினத் தவுணன கஞசப்
பாதங்கள் பணிந்து முக்கட் பண்ணவன் முருகந தனோடு
மேதமி லிநதி ராதி யிமையவ ரிவரா லென்று
மாதங்க மின்றி வாழுதற் கருமபிடை யெவையும்வேண்டும் ௪

இங்கெனக் கென்று வேண்டி யியம்பிய வரங்க ளெல்லாம்
பஙகய னுதவிப் போநதான் பாழித்தோ ளவுணா கோவுஞ்
சங்கரன் றனக்கு மம்ம தபெபுதற கரிய தாகி
யங்கண்மா நிலத்தில் வெய்ய வாலகா லமபோற பூக்கான் ௫

நல்லற மெவையு மாற நலநதிக மூநத ஞான
ரெலலையில வேள்வி யெண்ணி லிமையவ ரால யங்கள்
பலலவுஞ சிதைய நூறிப் படிமதனு செருக்கிப் பாருக்
கல்லலசெய் தழிக்க வன்னோ னழிவினுக் கிரங்கி வேந்தன் ௬

பாலொளி விரிக்குஞ செய்ய பருப்பத மதனைச் சாரநது
மேனுறை யமரா சிதறா விஞசைய ரியக்கர் மேன்மை
நாலிரு திக்குங் காக்கு நலஙகெழு மிமையோர் மல்குங்
கோலநீள் வரையி னந்தி குரைகழற் கமலம் போற்றி ௭

வீரகைவே லரசன் வெய்ய மயிடனு லுலக மெல்லாம்
சோகமிக் கழிநத வண்ணஞ் சொற்றனன் றொழுது நிறப
நாகிள மதியஞ் சூடு நநதியம் பெருமா னன்றென்
றேகநா யகனுக் கிவவா றியமபுது மென்று போநதான் ௮

நம்பனை வணங்கி நந்தி நாயக னணித்தாய் நின்றே
யம்புவி மயிடன் றன்னு லலக்கணுற் றழிந்த வண்ணந்
தும்பையுந் தொடையா யீங்கு சொல்லுவான் மனுவந் துற்று
னெம்பிரான் றிருவு ளத்துக் கேற்றவா றென்னை யென்னாக்

நந்தியிவ் வாறு கூற நாதனு நயந்து நோக்கிப்
பைந்தொடை மனுவை யீங்கு வரப்பகர்ந் திடுவா யென்னச்
சிந்தனை மகிழ்ந்தன் னோனுந் திண்டிறன் மனுவுக் கோதக்
கந்தடு களிறு வேந்துங் கழல்பணிந் தாங்கு புக்கான் ௧௪

புக்கவ னன்பு கூர்ந்தே புளகமெய் யரும்பக் கண்ணீ
ரொக்கமார பகந னைப்ப வொளிமுடி வணங்கிப் போற்றி
மைக்கட லுலக மெல்லா மயிட னுலைந்த வாறு
செக்காவா னிறத்தி னார்க்குத் திருவுளந் தேறச் சொற்றான்

சொற்றலுங் கருணை மூர்த்தி தோடவிழ் கமலப் போதி
னுற்றவன் றனனு லன்னோ னுருவா மனைத்து நோக்கி
மற்றவன் றன்னைப் பார்த்து மயிடனை யிடப்பான் மேவுஞ்
சிற்றிடை யிவளை யேவிச் செகுத்துநீ சேர்தி யென்றான் ௧௬

பரமப ரனினைய கூறப் பார்த்திப திலகன் றானுங்
கரந்தலை முகிழ்த்துப் பாத கமலங்கள் முடிமேற் சூடி
நிரந்தரன் றன்னைப் போற்றி நெடிதக மகிழ்ந்து சால
வரந்தைதீர்ந் தகிலத் தெய்தி யணிநகர் புகுந்தான் மன்னோ

மாதுமை தன்னை நோக்கி மயிடனைக் கொல்லு மாற்றல்
ஓதின்மற் றுன்னு லன்றி யொருவர்க்கு முறுவ தன்று
லாதலாற் சிங்க மூர்ந்து வடலெழு துர்க்கை யாகிப்
பூதலம் புகுதி யென்றான் பூவையு மனைய வாறே ௧௮

கன்னிய ரெழுவ ரோடுங் காசினி புகுந்து சோதி
மின்னியற் படைக ளெல்லாம் வியனகர மெட்டுந் தாங்கித்
துன்னருஞ் சிங்க மூர்ந்து துர்க்கைதன் வடிவ மெய்திப்
பன்னிய வட்ட காசம் பலமுறை புரிந்து மாதோ ௧௯

பற்பல வரைக ளெல்லாம் பாரகமொத் தழுங்க வெற்றி
மறெறுழில் கிளர்ந்த திண்டோண் மயிடனைத் தேடிக்காணாள்
சிற்பரை சீற்றத் தோடு சேண்டொடா மருணை வெறுபிற
பிற்படத் தீண்டு மம்பிற் பெருகுமை கத்தோ டுற்றாள் ௨௰

காண்டகு சிறப்பி னோடு கவலையொன் றானு மின்றித்
தூண்டிய சுடர்போ லாங்கு சுராசுரர் தொழுது போற்ற
வாண்டகை மடங்கற் பீடத் தமர்ந்தன னிருந்த காலை
மூண்டெழுஞ்சண்டவாயு முழக்கம்போன் முழங்கி நேர்ந்தாள்

கொழுங்கனல விழிகள்சிந்தக்குவவுத தோள்கொட்டியார்த்து
முழங்கிய விசையை வைகு மூர்க்கனை நோக்கி ஞாலத்
தொழுங்கல பலவுஞ் செய்தா யொழிதியோ வொழியா தாவி
விழுங்குமிக் கொடிய வாளால் வீழ்தியோ விளம்பு கென்றாள்

விக்ஷதயவ வாறு கூற வெகுண்டெரி சிதற நோக்கிப்
பைந்தொடி யாத லானம பகலவந் தினைய கூறி
யுயந்தனை பெண்மை யாணமை யுறுவதெவவுகைபோவென் று
நிந்தனை பலவுங் கூறி நின்றிடா பெனறு சொனனான ௨௩

ஊககமிக கெழுநத தாககை யுடன்றுபற புலவா நநதை
நாககவ னடுஙக வீசி நாநதகஞ சுழறறி யோசசுக
கோககளிற றுழவன வலலை கொதிதெழுந தணஙகின் மீது
நோககரும் படைகள வீசி நொடிவளா செகுபப னென்றே

பெணணுரு வெடுததுக கூறறம பிறஙகிய தெனவே நினற
திணணிய வணஙகி ஞகந திறநதுசெங குருதி பாய
வெணணில பலகணைக டேண்டி யிகல்செய வவளு மனனோன்
வணணமா பகத்துச சூல வாளைவேல வீசி யார்ததாள் ௨௪

இருவரு மினைய வாறே யிமையவா படைகள் வீசி
யொருவருக் கொருவ ராறற லொழிவில ராகி மண்டி
வருடமாயிரமபோர்செய்தாரமண ணுமவிண்ணகமு மெல்லாம
மரிதரி தெனன வமம வவாவலிக களவு முணடோ ௨௫

வடவையு முருமு முரு சீறி மாறுகொண் டமா்செய தெனனத்
திடவரைத தோள்கள் கொட்டிச சமாககளத் தடருங காலை
யுடலசிஙகங கதுவி விநதை யுறுவலி மயிடன் றனனை
யடர்மருப் பிரண்டும பறறி யவனியிற் சுழறறி வீழ்த்தாள்

ஆற்றல்சான் மயிடன் சென்னி யழுந்தத்த னடியர் லூன்றிக்
கூற்றுவா யன்ன வாளாற் கொடியவன் சிரத்தை யீர்த்து
வீற்றுவிற் றுக வேலை யங்கமும் வீசி யார்த்தா
ளேற்றமாம் பிரமசத்தி யுடன்வீர சத்தி யன்னே   ௨௯

இகல்புரி மயிடன் மீண்டு மீருரு வெடுத்தா னென்ன
வகலிட முழுது மஞ்ச வணங்கெதி ரடுத்த லோடும்
பகலெனக் கிரணம் வீசும் படையுடைச் சமரி வேறு
புகலிடமொன் றுங்காணாள் பொன்னிநன் னதியைச் சார்ந்தாள்

அத்திசை யிரண்டும வல்லை யணுகலு மாளி யூர்தி
வித்தகன் வணங்குந தென்பால் விளங்குமா ணிக்க வெற்பை
முத்தக முறிஞ்சுங் கோமளை முகிண்முலை யெழுவ ரோடுஞ்
சித்தமின புறவந் துற்றுள் சென்றவப் பிரம சத்தி   ௩0

அடிவரை யிடுதற கஞ்சி யதனியோ ரிரண்டு மாங்கே
தடைபடத் தியங்கி நிறபச் சமரியும வரைமீ தேறி
முடிமிசை மதியஞ் சூடு முதலவனை வணங்கிப் போறற
வெடிபடு சிங்க வூர்தி விழைவுற வெதிரவந் துற்றான்   ௩௧

கொண்டல்போ லிருண்டகண்டன் குமரியைக்குறிப்பினோக்கிக்
கண்டித்த லரிய சந்திர காசமீய்ந தனையி ரண்டுந
துண்டித்தல் புரிதி யென்னத் தூகையு மிதுகொ டேயோ
வெண்டிசுகு மிடிசுகு மாறற விடியினை யிடிப்ப தென்றே

மனத்திடைக குறித்த லோடு மற்றது தறிந்து பெம்மான்
கனத்திடை யுருவி யோங்கும கதிர்மணிச் சிகரத் தொன்றைச்
சினத்தினு கொண்டுபோழச் செய்தியென் றருளத் தாழ்ந்து
புனக்களி மயிலன் னாளும போழ்ந்தன ளதுகொண் டன்றே

ஐயமீ தின்றிப் பின்ன ரத்தியோ ரிரண்டு மாளத்
தையல்சந் திரகா சப்போர்த் தாரைவா ளோச்சிப்போழ்ந்தாள்
பெய்கழ லமரரெல்லாம் பெரிதரி தென்ன வேலை
வையகஞ் சிவாய மென்ன மனத்திலற் புதமுற் றாரால்   ௩௪

